உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# பசுவந்தனை

# வெண்பாவந்தாதி,

## திரு ஊஞ்சல்.

இது,

ஸ்ரீ வன்றொண்டரவர்கள்

மாணாக்கருள் ஒருவரும்,

காரைக்குடி

ராம. கு. ராமநாதச்செட்டியார்

குமாரருமாகிய

சொக்கலிங்கச்செட்டியார்

இயற்றியது.

சென்னை:

பிரஸிடென்ஸி அச்சுக்கூடத்தில்

அச்சிடப்பெற்றது.

விஸ்வாவசு௵ புரட்டாசிமீ

உ.

சிவமயம்.

# பசுவந்தனை

# வெண்பாவந்தாதி.



## காப்பு.

பொன்னுலக முன்னுலகம் போற்றுபசு வந்தனையா
நன்னகரா னந்தவல்லி நாயகற்குப்—பன்னுவெண்பா
வந்தாதி பாட வருளு மொருகோட்டுத்
தந்தா வளத்தினிரு தாள்.

## நூல்.

திருமார்பன் வேதந் திகழ்வாயன் றேவர்
பெருமான் முதலிமையோர் பேணி—யொருவாத்
தவமுனிவோர் சூழ்ந்திறைஞ்சத் தண்பசுந்தை மேவுஞ்
சிவனடியே போற்றுநெஞ் சே. (க)

சேவேறு தேவனே செஞ்சடையாய் நஞ்சடையு
மாவேறு கண்டா மலர்க்கண்டா—சோவேறு
புன்னகையாய் தென்பசுந்தைப் பூரணநா ராணனிப்
கன்னகையா பொன்னிகரங் கா. (உ)

கானமர்பூங் கொன்றைசடைக் கானமர்செம் மேனியசெ
ந்தேனமர்பூஞ் சோலைதிகழ் தென்பசுந்தை—வானவமுக்
கண்ணுவான் போற்றுமணி கண்டா கடையேனை
யெண்ணுவா னிற்றுதித்தற் கே.

ஏகமே செய்தே னிவையெனநாக் கூசுமந்தோ
போகமே லொன்றுமிலாப் பூரியன்யா—னாதனை
யானந்த வல்லியிடத் தார்பசுந்தை யண்ணலோ
வினைக்க விர்த்தா னெனை.

என்னுளைக்கேன் யாவு மிருந்தாங் குணர்முதல்வா
பொன்னுளைக்கொள் வேணிப் புனிதனே—நின்னிடத்தெ
ணார்த்தி யுணர்ந்தி யருள்கெனுந்தோ ரும்பசுந்தைத்
தீர்த்தனே தீர்க்கருணை செய்.

செய்ய சடையானே செம்பவள மேனியனே
வையமரு ளானந்த வல்லியிடத்—தையனே
யேதுறுமோ வென்றுகவன் றேக்கத்தா னேழைமையா
னோதுதி கொள்வா யுவந்து.

உவகைமிகப் பாலூட் டிறுகியம மன்னைக்
கவிர்தொழிலே னும்பசுந்தை யண்ணல்—சவலை
மழவுக் கழுவு மரபாமவ் வாறே
விழைவுற்*றென் பாட்டினையு மேவு.

* விழைவுற்றவென்னும் பெயரெச்சத்தகரந்தொக்கது.

மேவலர்தம் பான்முனிவான் வேறறவன் பாலேத்து
மாவலர்தம் பாலருளா லார்த்தியின்ப—மாவரிமுன்
வண்பதுமம் வாடன் மலர்த லுறல்போல
வொண்பகந்தை யான்முன் னுறும். (௮)

உறவு முறுதுணையு மோகைசெய்தாய் தந்தை
யறமும் பொருளின்பம் யாவும்—பிறவுமெலாம்
பண்பிசைந்த சான்றோர் பணிந்திறைஞ்ச வின்பருளுந்
தண்பகந்தைச் சம்புவிரு தாள். (௯)

தாழ்ந்திலே னன்பொடுநின் றாளிற் றிருக்கோயில்
சூழ்ந்திலே னைவாற் றுதித்திலேன்—போழ்ந்தமதிக்
கோடீரத் தானேயென் கோடீரத் தென்பகந்தை
யாடீரத் தானே யருள். (௧௦)

அருளா யுருவா யருவுருவாய் வேதப்
பொருளாய்மெய்ப் போதமாய்ப் போதத்—தெருளாய்ச்
சுயமே யொளிருஞ் சுடராய் மருவும்
வயமார் பகந்தையிலெம் மான். (௧௧)

மாலார் பிறந்தையெனும் வாரியிலாழ்ந் தாயிழையார்
சேலார் விழிவலையிற் சிக்கியே—தாலோது
நன்னெறிச்செல் லாதலைந்தே னேதமே தென்பகந்தை
மன்னுமிறை வாவருளு வாய். (௧௨)

வாயுனையே வாழ்த்த மனமுனையே சிந்திப்ப
மெய்யுந் தலைதா னிறைஞ்சவே—நீயுயிர்கட்

ஜீதனுண ராமலந்தோ வேற்றிழையார் பாழ்பசுந்தை
யாதியனே சாரு மவை. (௧௩)

அவைநிறைந்த கூத்தா வருட்பசுந்தை நாதா
சிவையிடத்தின் மேவிமகிழ் தேவா—நவைநெறியிற்
போதலே புண்ணமுதாம் புன்மையேற் குன்றுதிசின்
றோதலே நஞ்சாமந் தோ. (௧௪)

அந்தோநா னென்செய்கே னன்றால் விடமிமையோர்
வந்தோ விடக்கொண் டணிகண்டா—முந்தாருஞ்
செய்யாத தீமையெலாஞ் செய்புலையேன் றென்பசுந்தை
யையயாநா னுய்வதெந்நா ளாம். (௧௫)

ஆமோ வெனக்கு னருளென் றுநைந்துமனம்
வேமோர்கா லவ்வுணர்வை வேல்விழியார்—தீமோக
மாவா மறைப்ப வயர்ந்ததுவா கின்றேன்மா
தேவா பசுந்தையமு தே. (௧௬)

அமுதா யமுதி னருஞ்சுவையா யன்பர்
சமுதாய முண்ணத் தருவோய்—குமுதவாய்
வெற்பனையன் பொற்பாவை மேவும் பசுந்தைநக
ரிற்பரனே யற்புதவெற் கே. (௧௭)

கேதமிக வாமென்ப கேட்டிருந்து மந்தோபுன்
மாதர்முலைக் குன்றேறி மாழ்கின்றே—னாதனே
தென்பசுந்தை வாழு சிவனே சிவைபாகா
வென்புகுமோ நாயேற் கினி. (௧௮)

இனியோர் புகலுண்டென் றெண்ணுகிற்போ மலமேலா
றனியே பசுவந் தனைமா—முனியே
முனியேலென் றீமை முனியாமழையந்தோ
பனியேய் மலைமகளன் பா. (௧௯)

பாவாணின் பாதம் பரவுந் தராமதியன்
பாவாணர் போற்றும படிவினவி—நாவாற
றுதிபோலத் தென்பசுந்தைத் தூயோனே நாயேனை
மதிபோன வாபோற்று வல். (௨௦)

வல்லான் வருத்தநதே வாய்கரா லெனையினபா
லல்லான்மற றியாராபாலா மண்ணமேல—வில்லாருந்
தென்பசுந்தை வாழ்வே சிறுமுனிவற் கோட்டான்
டென்பதன்று மாற்றினைநீ பே. (௨௧)

ஏனோ வுணரா தெரிகரயிற் சேவர்பலர்
தானேவீழ்ந் தெய்க்கின்றா தானுமே—வானோர்கள்
போற்றும பசுந்தைப புராந்தகா நீயெவர்க்கு
மாற்றும மருள்பொ துவா னல். (௨௨)

*ஆவிபோது வேனுமுட மானோர் துணையின்றி
மேவியுண மாட்டா விதமேபோ—னீவிழைந்தெற்
கூட்டினு லன்றி யுனும்வழியில் லென்பசுந்தை
நாட்டினு யாரருணீ நல்கு (௨௩)

---

* ஆவி - எண்டுவாவி.

நவையென் பனவெல்லா நாடிச்செய் தீயேன்
றிவையன்பின் வாழிடத்தாய் தேவே—யவையின்க
ணின்றுடி தென்பசுந்தை நேசா கயிலேசா
வென்று தரிப்பா யெனை. (௨௪)

எனைநீ யுணர்த்திலை யானுணர்வே னன்றி
நினையா னுணரு கிலையே—தனையே
பசுவந் தனையான் பரமா திரமா
விசுவந் தனையார்வாழ் வே. (௨௫)

வேயனைய தோளார் விழிவலையி லார்த்தாசைப்
பாய கடற்குட் படுத்திமுலை—யாயமலை
யாலமுக்த னைந்தாங் கலைந்தே னருள்பசுந்தைச்
சூலிபங்கை யாய்தாட் டுணை. (௨௬)

துணையாவைந் தக்கரமே சொல்லுமா சொல்லி
யணையாருங் கண்டிகைநீ றென்று—மணிவார்தம்
பாதமுடிக் கொண்டோரே பண்பார் பசுந்தைமுக்க
ணாதியடிக் கீழின்பத் தார். (௨௭)

ஆமோ வினைதபுத்தெ மார்த்தியறத் தென்பசுந்தைப்
போமோற்றான் றளிற் புணர்ப்பமோ—வூரூர்தோ
றோடியுண ராதந்தோ வொண்டொடியார் தொண்டொடியாய்
நேடியினைத் தாய்மனமே நீ. (௨௮)

நீகேண் மடநெஞ்சே நிச்சயமின் னார்திறத்திற்
போகே விடர்முழுதாம் பூட்டுமது—பாகே

ஆனோர் கொடியா யருளுருவோர் பாற்கொடியாய
மானோர் கரத்தாய் மலர்கரத்தாய்—வானோரு
ளாற்றும் பணியா யணியும் பணியாய்நீ
போற்றும் பசுந்தை புரம். (௧௫)

புரமூன் றெரித்தாய்முன் புன்னகையாற் காமன்
புரமூன்று பார்வையாற் போக்கும—பரமூன்று
மாமலமும் வீட்டும் வகைபசுந்தை நாதாகை
யாமலகம் போனமேற் றற்று வாய். (௧௬)

ஆயே யெனையுணர்த்து மத்தமனை தென்பசுந்தை
வாயே யனவரத மன்னிவாழ்—தூயோனே
மூலகணக்க வக்கணக்கொள் முத்தசித்த பெத்தமுத்தி
யக்கணக்கெ னெற்குணர்த்தி யாள். (௧௭)

ஆளும் பதமெனக்கின் றாயினுநின் றாருட்கெந்
நாளும் பதம்பசுந்தை நாதாவெண்—டோளு
மதிமுடியு மாமிடறும் வார்கழலுங் காட்டி
யெதிருறுவாய் தேகாந்தத் தில். (௧௮)

இல்லா விடையா ரிடைமயக்குற் றெந்நாளு
நல்லானை நானுலைதன் ஞாயமோ—வல்லானை
யொன்றுடையாய் நின்றுடையா தோதுபுலிப் பாதர்பணி
மன்றுடையாய் நன்றருளு வாய். (௧௯)

வாயே மனமே வபுவேயென் றிம்மூன்றெந்
தாயே நினதிடையே சார்ந்துநிற்ப—நாயேற்

இருவினையொப் பாக விருண்மலவீ றேக
வருள்பசுந்தை வாழ்வேய ரா. (௪0)

அரனே யமுதே யழகா குழகா
வரனே பசுந்தை வரதா—பரனே
யுரகா வரணா வுமைமா திடையே
விரகா வரணா விழை. (௪௧)

விழைவா யரனே விழைந்தா லடியே
னழகா வுனதா ளயமோ—னெழிலார்
வடவா லிடையார் மௌனா பசுந்தை
யிடமா யமர்வா யெனை. (௪௨)

எனைத்துயருந் தீர்த்தா ளெழிற்பசுந்தை நாதா
நினைத்துதிக்க நானுணரா நீசன்—பினைத்துதிக்கப்
பண்ணுவதுன் பாரமே பாவியேற் கின்பருள
வெண்ணுவது முன்பாரமே. (௪௩)

ஏதந் தருபவத்துற் றெய்த்தே னெறாழ்மறலி
தீதந் தெனையலைப்பச் சேர்ந்திடுமப்—போதந்தோ
வென்செய்கேன் றென்பசுந்தை யீசா கயிலேசா
தஞ்செனக்கா ரஞ்சலெனச் சார். (௪௪)

சாரங்க வம்பகத்தார் சைலமக ளாரொருபாற்
சாரங்க வம்பகத்தார் தண்பதுமன்—சாரங்கச்
செங்கரனோர் காணாச் சிலம்படியாய் தென்பசுந்தைச்
சங்கரனே நின்றாள் சரண். (௪௫)

சரவணத்தன் காழிவரு சம்பந்தன் றாதை
யரவணைத்தன் மேனிக் கணியாச்—சிரவணத்த
நான்மறையோர் வாழ்பசுந்தை நாதன் பதமனமுன்
பான்மறையா தாரும்வகை பார். (௪௬)

பார்த்திலையக் கோவுற்றுப் பாழ்மனமே யெங்குறாகிற்
கேர்த்தவளஞ் சால்பசுந்தை யீசனன்று—ளோர்த்துணர்மெய்ஞ்
ஞானமய வாகீசர் நன்முடியி னல்லூரிற்
றானருளிச் சூட்டுமலர்த் தாள். (௪௭)

தாழ்மதிநீ தென்பசுந்தைச் சங்கரனைத் தற்பரனைப்
போழ்மதியார் வேணியனைப் பூணியனைப்—பாழ்மதிசே
ராதனையு மாட்கொணம்பி யாரூரற் கன்றுசென்ற
தூதனைநெஞ் சேயெப்போ தும். (௪௮)

தூங்கமறை வேதியனாய்த் தூயதிரு வாசகத்தை
யங்கணுகி வாதபுரி யண்ணல்பாற்—செங்கரங்கள்
சேப்பவெழு தும்பசுந்தைச் சிற்பரன்றா ளேநம்மைக்
காப்பதலா லுண்டோ கதி. (௪௯)

கதிர்முடிவேந் தென்கண்ணன் கண்ணனிவர் தாம்வாழ்
பதிமுழுதாண் டின்பம் பருகி—யதிலுவர்ப்புற்
றாசனையத் தானவனே யாகிநெஞ்சே தென்பசுந்தை
யீசனையே பேசினையா யில். (௫௦)

இல்லாளாய்ப் பாணமா யேறுமாய் கிற்கியைந்த
நல்லானை மால்பசுந்தை நாதனை—யெல்லாமாய்

நின்று யவற்கொளித்து நேடியலை வானின்று
யென்று லெமர்க்கிமற் றென். (௫௧)

என்னா யகனே யெனையருளா னந்தவல்லி
தன்னா யகனே தருமிமையோர்—நன்னா
யகனே பசுந்தை யமுதே நுதலம்
பகனே யருனேனாக்கம் பண். (௫௨)

பண்ணமரும் வேதம் பயில்வாயான் றன்பசுந்தை
யண்ணலருள் பெற்று ரடியார்க்கு—விண்ணமரு
பாலம் புயனெடுமால் வாழ்பதமெல் லாஞ்சிறுகாற்
காலுந் திரும்பைபதிக ராம். (௫௩)

ஆகும் பொருள்பசுந்தை யம்மான்றன் மற்றெல்லா
மேகும் பொருளென் றினிதுணர்வி—வேக
மவனடியார்ச் சார்ந்தே யவரேவல் செய்யு
மவரிடையல் லாலெவர்பா லாம். (௫௪)

ஆனே றுடையா யருளுருவி லாசையெட்டுந்
தானே றுடையாய் சடையானே—வானேறும்
பைம்பொழிறே னூற்றும் பசுவந் தனைநகரத்
தெம்பெருமா னம்பகின்று னே. (௫௫)

ஏதப் பவக்கடல்வீழ்ந் திச்சையெனு முட்சுறவா
மோதத் திரைமாதர் முன்மைமிழ்த்த—மாசத்தி
னுற்றேற்கிப் போதே யொளிர்பசுந்தை யெம்மானே
சற்றேனு நின்னருளைத் தா. (௫௬)

தான நிறைபொறைமை சான்றாண்மை சத்தியமுஞ்
ஞானமெலாந் தென்பசுந்தை யம்மானே—நீநவிலு
மாமருளா லாமென் றருமறைமுன் னோதவுமென்
றோரகிலார் மூடா சிலர். (ருஎ)

சில்லரிக்கட் டேமொழிப்பூந் தேங்கோதைப் பூங்கொங்கை
வல்லமைத்தோ ளானந்த வல்லியிடம்—புல்லவமா
தென்பசுந்தை நாதா சிறியேற்குன் றாளன்றி
யென்புகன்மற் றோர்ந்தா யிசை. (ருஅ)

இசையுலகெ லாஞ்சூழ் பொழிற்பசுந்தை நாதா
நசைமுனிவொன் றில்லாத நம்பா—மிசைவிண்மதிப்
பிஞ்சக் கரவுடையாய் பேதையேன் பேதையுற
நெஞ்சக் கரவுடையாய் நீ. (ருகூ)

நீயேயெல் லாமாகி நின்று யெனையளித்த
தாயே பசுவந் தனையமருந்—தூயோனே
யொன்றாநீ யல்லையுனை யன்றியிலை யொன்றுமெனி
னன்றுணர்வ தெவ்வாறு நான். (சாO)

நானே லடியவனென் னாயகனீ யீதுண்மை
மானேய் கரதபசு வந்தனையெம்—மானே
மருள்புரிவா யில்புகுந்து மாழாதுன் றாளே
யருள்புரிவா யீதென் னவா. (சாக)

ஆவனே யவளதுவென் றாமுணர்வு நீத்தெம்
பவனே யெமையாள் பசுந்தைச்—சிவனே

பரமா சிவோகமா பாவனையுந் தென்றுந்
திரமாகும் பேறருளிச் செய். (௩௨)

செய்யனே பொன்மேனிச் செல்வனே யென்னுரிமை
யையனே தென்பசுந்தை யண்ணலே—பொய்யனேன்
பொய்மாதர் வாஞ்சைப் புணர்நெறிச்செல் லாதருணீ
செய்மாதர்ச் சைவச் செலவு. (௩௩)

செல்லார் பொழிற்பசுந்தைச் செஞ்சடையா னெல்லாமும்
வல்லா னுமையாளு மாதேவன்—புல்லா
ரரணங்கண் மூன்றெரித்த வண்ணலு ளன்றி
யரணம்வே றுண்டோ வறை. (௩௪)

அறையுண்டு மொத்துண் டவாசித் திசையான்
கறையுண்ட வேலாற் கவலேல்—பிறையுண்ட
வேணியான் பாதமே மென்மலரா லர்ச்சிப்பாய்
பாணியாய் நெஞ்சே பணி. (௩௫)

பணிகொண்ட வேணிப் பசுவந் தனையான்
பணிகொண்ட சென்னியராய்ப் பாரிற்—கணிகொண்ட
மெய்யடியா ரேவறரும் வேண்டுவநெஞ் சீதன்பால்
வையடியா ரின்பும் வரும். (௩௬)

வளாவில்லான் றென்பசுந்தை வாணனடி யார்க்கு
வளாவில்லா தீயும் வரத—னளாவில்லா
ரேறுடையான் சேகரமே லிந்துடையான் சேவடியே
தேறுடையா ரெம்[illegible] (௩௭)

தேவனே தென்பசுந்தைச் செல்வனே நால்வருட்
பாவனே யாதிப் பழமறைசொ—லாவனே
மாதேவா வானந்த வல்லிபங்கா வென்றுநெஞ்சே
போதோவா தென்றும் புகல். (௬௮)

புகலாகின் றானே புகுந்தடியே னென்று
மகலா தடைந்தே னரனே—மிகலாருந்
தென்பசுந்தை வாழு திருவுளமீ தென்றறியே
னென்பெறினு நின்கருணை யே. (௬௯)

ஏவந் துயிலு மிரதமசை வில்லெநுனைகச்
சாவங்கன் மேற்கிழக்கிற் றன்மாறிப்—போவதாரு
டென்பசுந்தை வாழு திரிபுரத்தை நீதுணையா
யென்பொருக்க வென்று யிசை. (௭0)

இசையார் பசுந்தையம ரெம்மானே வானோர்
நசையார வந்திறைஞ்சு நாதா—மிசையாருந்
தண்மதியாய் நாயேனைச் சார்மலத்தி னூற்றதனைத்
தண்மதியா னிற்றொழுவே தா. (௭௧)

தானேவந் தென்னைநீ தாங்கினு லல்லாலெம்
மானேயான் போதும் வழியில்லேன்—றேனேயும்
பூம்பொழில்சூழ் தென்பசுந்தைப் புண்ணியா கண்ணியா
வோம்புமதி வேணியெந்தா யோ. (௭௨)

ஓதியா யோதி யுணர்பொருளா யுய்த்துணரு
நீதியாய்க் காண்பானைக் கேசிலருஞ்—சோதியா

பின்னும் பரவெளியா யெய்த்து மெமக்கிரங்கி
மன்னும் பசுந்தையிலெம் மான். (எ

மானே விழிகண் மடமயிலே சாயனலுந்
தேனே மொழியென்று சேயிழையார்—பானுரு
மோடிமட நெஞ்சே யொருகணமே னும்பசுந்தை
யாடிமிறை பாதநினை யாய். (எ

ஆயிழையார் தம்பா லடைமேவ யருந்துசுகம்பன்
ருய்வதநீ யென்று முலைந்தாயே—மெய்மனமே
துன்பல்லா வின்பெட்டி னையபெருங் கண்டாயே
தென்பசுந்தை யான்றுணை சேர். (எ

சேரார் புரத்தைச் சிரித்தெரித்த தேவேசன்
பாராய்நஞ் சஞ்சிதத்தைப் பார்த்தெரிப்பான்—கூரா
திருவினைமா மாயை யிருளும் பசுந்தை
யொருவனையே நெஞ்சன்பா லூன்று. (எ

ஊனந் தவிர்த்தே யுதவுநித்தி யானந்த
மானந்த வல்லியிடந் தண்ணலவன்—ஞானந்த
மத்தியமுன் னில்லான் வரதன் பசுந்தையர
னித்தியமு நெஞ்சே நினை. (எ

நினையா னறவுணர்த்தி நின்று னிழல்சேர்த்
தெனையாள் பசுந்தைநக ரெந்தா—யனையாக
வானந் தரணியர மற்றெல்லாந் தந்தருளு
மானந்த வல்லிபா கா.

பாகனை வேதப் பரிபூரணந் தென்பசுந்தை
யேகனை வேணிப் பிறைதாங்கு—மேகனை
நீல மணிமிடற் றைய னின்மலனை யென்மனத்தான்
சாலவுனை யுன்றுமொழி தா. (௭௯)

தாரணியெ லாஞ்சூழுந் தென்பசுந்தை யாயிதழித்
தாரணியுஞ் செஞ்சடை யாய தாணுவே—நாரணியும்
பூமாலை வாகாப் பொருந்த வருணினக்கே
பாமாலை சூட்டும் பணி. (௮0)

பணிகொண் டெனையாள பகவன் றனையான்
பணிகொண்ட வேணிப் பரமன்—மணிகொண்ட
கண்டத்தா னண்டத்தா காரத்தீர்த் தாதரித்தான
வண்டத்தா ரார்பதமே வாழ்த்து. (௮௧)

வாழ்வாரு மெவ்வுலகும் வந்திப்பக் கைவிரித்துத்
தாழ்வாருந் தென்பசுந்தைச் சங்கரனைப்—போழ்வானத்
திந்தபரும வேணியனை யெம்மானை யீசனைவாழ்த்த
தந்தமுள்ளா ரேத்தா தவர். (௮௨)

அவமாக நாள்கழித்தே னந்தோவம் மட்டோ
வெவமே பலபுரிந்தே னேழை—சிவனே
பசுந்தையாய் மற்றெனக்கோர் பற்றிலே னுள்ளங்
கசிந்தையா நீசெயருட் கண். (௮௩)

கண்ணார் நுதலோய் கனபாருங் கண்டத்தோய்
நண்ணாரும் வேதப் பசுந்தையோய்—கண்ணார்

நடியேற்குஞ் சம்பியா கம்போற்றுப் பேணி
யடியேற்குன் றாளே யரண். (அச)

அரணமோர் மூன்று மசித்து நசித்துரு
சரணளித்தம் மூவரையுந் தாங்கிப் புரண
வருட்டிறந்தேற் றம்பசுந்தை யண்ணலார் தம்மேனம்
மருட்டிறந்நோய் மாற்று மருந்து. (அரு)

மருந்தாகி மந்திரமாய் மற்றெவையு மாய
பெருந்தாபந் தீர்த்தருளும் பெம்மான்—விருந்தாக
விண்ணோ ரமுதுண்ண வேலைவிட முண்டார் பசுந்தைக்
கண்ணுதலான் றாளே கதி (அசா)

கதியாவு முன்றன் கழலேயென் றோர்ந்தா
ரிதயாலை யக்கமரு மெந்தாய்—மதியாருஞ்
செஞ்சடையாய் தென்பசுந்தைத் தேவனே நின்றாளை
தஞ்சடைவா யென்றுருநாற் சாற்று. (அஎ)

சாற்றுகினும் வாவென்று சாராமற் றள்ளியெனைக்
கூற்றினுக்கா ளாகக் கொடுக்கினும்வெள்—ளேற்றவனி
யாட்டுமா றன்றி யசைவுண்டோ தென்பசுந்தை
நாட்டநுத லானே நவில். (அஅ)

நவையே யெனச்சுறவா ஞானம் பகையா
மெவமாருந் தீமைகண் மற்றெல்லா—நவமா
ரணிகலனுந் தென்பசுந்தை யண்ணலிக் கோட்டுந்
தணிகலனு னுய்வதென்றோ தான். (அகூ)

ஞானந் தவம்யோகஞ் சாந்தஞ் சிவதரும
தானந் தயையருண்மெய் நற்குணமுன்—னானவெலாந்
தென்பசுந்தை வாணன் திருவடியிற் றாழ்ந்தேத்து
மன்பிசைந்தார்க் குள்பொருளே யாம். (௬௦)

ஆசையென்றாய் தந்தை யழுக்கா றறவுவஞ்ச
மோசமெலாந் தோயூர் முழுமூட—னேசனந்தோ
வைம்பா தகமகா ரண்ணாலோ தென்பசுந்தை
நம்பானே யுய்வதென்றோ நான். (௬௧)

நாரியர்மைத் தாரையினி னன்பிணியுந் தந்தோவப்
பாரியகொங் கைப்பொருப்பிற் பாய்ந்திடறி—வீரியம்போய்ப்
பாழ்ங்குழியில் வீழ்ந்தேன் பசுவந் தனையானே
வாழ்ந்துயர வீடேற்று வாய். (௬௨)

வாயில் விடைய வழிபுகவென் மான்மனமங்
கோய்விலா தோட வுனைமறந்தேன்—பேயனேன்
தீயனேன் பேதையேன் செய்வதறி யேன்பசுந்தை
நாயனே நானுணர்வா னல்கு. (௬௩)

நல்லார் தொழும்பரனே நாதாமெய்ப் போதாவின்
செல்லார் பொழிற்பசுந்தைத் தேவேசா—வல்லார்
மிடறுடையாய் செஞ்சடையாய் வெள்விடையா யென்றான்
படறுடையாய் நல்கா யருள். (௬௪

அருள்காட்டுங் கண்டி யரனே பதியாந்
தெருள்காட்டும் பூதி சிவமெய்ப்—பொருள்காட்டு

வைஞ்செழுக்கே சார்வா யடியேன் பசுந்தையேயாய்
நெஞ்சழுத்தி யுய்வா னினை. (௯௫)

நின்னையே போற்றுகிற்பார் நெஞ்சகத்தோய் தென்பசுந்தை
யன்னையே யென்னையுணர்த் தையனே—பின்னையோர்
பால்வைத்தோய் மும்மலமும் பாற்றுதற்கென் சென்னியினின்
கால்வைத்த லென்றருளிக் காண். (௯௬)

காணார் பசுந்தையிலெங் கண்ணுதன்முன் பண்ணுதலைக்
காணார் தமக்குறுதி காணாரோ—காணாயென்
ன்னெஞ்சே வன்னஞ்சார் கண்டத்தான் றொண்டைத்தான்
முன்னஞ்சார் நின்னஞ்சா முன். (௯௭)

முன்னவனைத் தென்பசுந்தை முக்கண்ணுச் செக்கண்ணு
னென்னவனை யென்றிறைஞ்சு மெய்த்தைநின்சீர்—பன்னவனே
கற்றாவுங் காணவனை கங்கண்ணும் பெற்றுறு
மென்னுர்வந் தானடங்கா தே. (௯௮)

தேயமெலாம் பாயபுகழ்த் தென்பசுந்தை வாயமரு
நாயகனை மாயவனை நான்முகனை—யேயிருபாற்
கொண்டவனை மிண்டகமே கோற்றொடியா ளந்தவல்லி
வண்டவனைக் கண்டவனீ வாழ்த்து. (௯௯)

வாழ்த்துவதுன் மெய்ப்புகழே வந்திப்ப துன்பதமே
பாழ்த்துவதென் றீவினையே யாகவருள்—சூழ்த்து
மறியேற்குங் கையாய் வளர்பசுந்தை வாழ்வே
சிறியேற்கு ஞானத் திரு. (௧00)

---

## வாழி.

கார்வாழி யந்தணர்யா கம்வாழி புரவலர்கோ
னோவாழி பிறங்குசைவ நெறிவாழி தென்பசுந்தை
பூர்வாழி கைலேச னுடங்கமரா னத்தவல்லி
பேர்வாழி நீறுமணி பேணடியார் குலம்வாழி.

## முற்றிற்று.



உ

சிவமயம்.

# பசுவந்தவனை

# திருஊசல்.

காப்பு.

மாமேவு மலைமாதி பஞ்சார வாவி
பலகுபசு வந்தனையூ ரையக்க வாழு
காமேவு மானகக வல்லி பாக
நயக்சமருங் கைலாய நாதர மேவும
பூமேவு திருவூச லாடற் போதம
புணாக்தகளிங் கொருதமியேன் புகன்று பாட
சாமேவு மொருகோட்டுக் கறபகத்தினை
கருணைபொழி தநமலாத்தாள காபப தாமே

———

நூல்.

பூமேவு நாலம்வேகம விட்ட மாகப
பொருணமேவு முபநிடதந் தாமபா சாச
நாமேவு மாறங்கவ காலக ளாக
சலமேவுஞ சிவாகமங் கருபூ சட்ட பாகச

தடமேதி கடலார்வா னென்னப் போந்து
தாணுழக்க மீனுகண்டு தாழை சாயப்
புடைமோதி மூப்புடைக்காய் முதுகு றைப்பப்
போகட்டு வெருண்டோடப் புரிந்த தொன்றோ
விடியாதி யின்றிமுகின் மழையும் பெய்வித்
தின்பொடுவா ழகழிசூழ்ந் திலங்கு வான்சேர்
கடியாரப் பசுந்தையிலா னந்த வல்லி
கைலாய நாதரோ யாடீ ரூசல். (௭)

பொருவரிய நால்வேத சிவாக மங்கள்
புராணமிதி காசமுதற் புகலு மோதை
யரியதமிழ் மறைபோத மாதி யோதை
யாயிழையா ராடன்முழ வரங்கி னோதை
யிரதகய துரகாதி யியலு மோதை
யெழுகடலோ வெழுமுகிலோ வென்னு வானோர்
கருதுபசு வந்தனையா னந்த வல்லி
கைலாய நாதரோ யாடீ ரூசல். (அ)

தாத்துவிக மாதிதெரீஇத் தம்மை யோர்ந்து
தற்போதங் கழன்றொழியுந் ததிய ராய
மாத்தகுசீர் மகார்கடமை யருணீ ராட்டி
மலங்கழுவி நலங்கொளுவி மாறு தென்று
மார்த்திடுபே ரின்பாய தொட்டி லேற்றி
யாட்டியவர் தாமாம்வாழ் வளிக்கும் வாய்மை

காத்தருள்வான் பசுந்தையிலா னந்த வல்லி
கைலாய நாதரோ யாடூசல். (௯)

தோமகலு மன்பொடுமுன் பிறைதஞ்சி வேட்ட
தொண்டர்குழா மிண்டிடவத் துன்பை விட்டத்
தாமரைமே லுமகன்முன் கருதி கூட்டச்
சதுமுகனின் னிசைவீணை தடவி யிட்டப்
பாமருமெய்ப் புலவர்களுத் துதிகள் காட்டப்
பரவுமணிக் திசைமுதலோர் பாடி யாட்டக்
காமர்பசு வந்தணையா னந்த வல்லி
கைலாய நாதரோ யாடூசல். (௧௦)

வேதசிவா கமங்களவற் றறங்கள் வாழ
விண்டெயலின் வண்டயன்மேன் மேலும் வாழப்
பூதிமுத லாஞ்சிவசா தனங்கள் வாழப்
பூண்டொழுகு மெய்யடியார் பொலிந்து வாழ
நீதிபசு வந்தணையூர் நிலவி வாழ
நிகேதனமீ தங்கமொடு நிரம்பி வாழக்
காதலருள் புரிந்திடுமா னந்த வல்லி
கைலாய நாதரோ யாடூசல். (௧௧)

முற்றிற்று.